## V.—GOVERNMENT MOTION.

### MOTION UNDER RULE 21 (3) OF THE COUNCIL RULES.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Chairman, Sir, I move—

"That under Rule 21 (3) of the Madras Legislative Council Rules, the order business arranged in the list for today be revised and item (2) under 'Government Bills' be taken up before item (1)."

MR. CHAIRMAN : The question is :

"That under rule 21 (3) of the Madras Legislative Council Rules the order of business arranged in the list for to-day be revised and item (2) under 'Government Bills' be taken up before item (1).".

The motion was put and carried.

## VI.—GOVERNMENT BILL.

### THE MADRAS CITY MUNICIPAL CORPORATION (AMENDMENT BILL, 1965 (L.A. BILL NO. 16 OF 1965).

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Chairman, Sir, I move :

"That the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965 [a] (L.A. Bill No. 16 of 1965), as passed by the Assembly, be taken into consideration.".

Hon. Members may remember that the Madras City Municipal Corporation (Amendment) Act, 1961 came into force in April 1962. Several difficulties are now being experienced in the working of the principal Act and hence Government are considering the question of amending the Act comperehensively. As this may take some time, it has been decided to introduce a Bill containing a few important amendments to the Madras City Municipal Corporation Act, 1919. The following are the sailent features of the Bill :

The conditions of service of the Commissioner which included his pay, leave, leave salary, term of appointment, etc., can be regulated by Government under sub-section (5) of Section 7 of the Act. Hence sub-section (1) of Section 8 and Section 14 are unnecessary. Clauses 2 and 3 of the Bill seek to omit these provisions.

Under the proviso to section 24 of the Act if any resolution of the Corporation Council or a committee constituted under the Act contravenes any provision of any statute, rule notification, regulation or by-law or any order passed by the Government, an obligation is cast on the Commissioner to refer the matter to the Government for orders within 15 days of the passing of the

---

[a] Printed as Appendix II on pages 72–77.

9th August 1965] [Sri M. Bhaktavatsalam]

resolution and inform the council or the committee, as the case may be, of the action taken by him at its next meeting. The time limit of 15 days has been found to be too short. It is, therefore, proposed to enlarge the period to 30 days and also to empower the Government to grant an extension of time not exceeding 15 days. Clause 4 of the Bill as passed by the Assembly provides for this.

Section 41 of the Madras District Municipalities Act, 1920, empowers the State Government to dissolve or supersede a Municipal Council, if in their opinion, the council is not competent to perform or persistently makes default in performing the duties imposed on it by law or exceeds or abuses its powers. 5-00 p.m.

The Madras City Municipal Corporation Act does not contain any such provision and also similar to the provision in section 41 of the Madras District Municipalities Act, 1920. Further, though there are certain powers vested with the State Government like the power to call for records, to cause inspection to be made, to direct the taking of action, to appoint a person to take action in default at the expense of the Corporation and to cancel resolution and by-law, it has been felt on many occasions that the existing provisions are not adequate enough to meet certain contingencies. Hence it is proposed to amend the Madras Corporation Act for making this enabling provision on the lines of Section 41 of the Madras District Municipalities Act, 1920. Clause 5 of the Bill seeks to incorporate such a provision. A similar provision exists in Section 490 (1) of the Delhi Municipal Corporation Act, 1957. The Calcutta Corporation has also once been superseded for a period of four years up to 1952. A few days back, the Maharastra State Government has under the Nagpur Corporation Act, issued a show cause notice to the Nagpur Municipal Corporation as to why the Corporation should not be superseded as the Corporation has exceeded and abused its powers in the case of water-supply and repayment of loans.

Under Section 7 of the Act, the Commissioner, the two Assistant Commissioners and the Personal Assistant to the Commissioner are appointed by the State Government. Under section 85 of the Act, every appointment of a Health Officer, an Engineer, an Electrical Engineer, a Revenue Officer, a Chief Accounts Officer and an Educational Officer has to be made by the Council of the Corporation out of a panel of names prepared by the State Government. As these Officers are heads of departments, it is appropriate that they are appointed by the State Government themselves. Necessary provisions in this behalf have been proposed in the Bill.

The question of improving the administrative efficiency of the City Municipal Corporation has been engaging the attention of Government since a long time. After careful consideration, the Government have come to the conclusion that for this purpose the State Government should have the authority to provincialise any category of posts in the Corporation. To ensure that recruitment

is fair and impartial and that selections are made on merit, consultation with the Madras Public Service Commission is essential. Such consultation is done by Government in regard to posts to which they make the appointment. It is therefore considered that a similar procedure may be followed in regard to the posts under the Corporation also. Necessary provisions in this behalf are proposed in new sections 94 to 97.

Under the proviso to section 142 of the Act, no loan can be raised by the Council without the previous publication of the application under the Local Authorities Loans Act, 1914 and the rules issued thereunder. As this procedure involves delay, it is proposed to delete the provision requiring such previous publication. Clause 12 provides for this.

With these words, Sir, I commend the Bill, as passed by the Legislative Assembly, for the consideration of the House.

MR. CHAIRMAN : The amendment may also be moved so that the motion and the amendment may be discussed by the House.

SRI K. ANBAZHAGAN : Mr. Chairman, Sir, I move—

" That the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965 (L.A. Bill No. 16 of 1965) be referred to a Select Committee of the Legislative Council consisting of the following Members :—

The Hon. Sri S. M. A. Majid,
Sri K. Anbazhagan,
Sri M. Subbiah Chettiar,
Sri K. Rajaram,
Sri K. R. Ramasamy,
Dr. H. V. Hande, and
The Hon. Sri M. Bhaktavatsalam (mover of the Bill)."

திரு. என். வி. நடராசன் : திரு. அன்பழகன் பிரேரேபித்துள்ள திருத்தத்தை நான் வழி மொழிகிறேன்.

MR. CHAIRMAN : The motion and the amendment are before the House for discussion.

திரு. எஸ். கே. சம்பந்தன் : கனம் தலைவர் அவர்களே, சென்னை நகர கார்ப்பொரேஷன் சட்டத்தைத் திருத்த அரசாங்கம் கொண்டு வந்துள்ள திருத்தங்களில் ஒரு சிலவற்றை ஆதரிக்கிறேன். கார்ப்பொரேஷன் அலுவலர்களின் அந்தஸ்தை அரசாங்க அலுவலர்களின் அந்தஸ்திற்குச் சமமாக ஆக்குவதற்குக் கொண்டு வந்துள்ள திருத்தம் அவசியமானது. அதைக் கொண்டு வந்ததற்காக அரசாங்கத்தை நான் பாராட்டுகிறேன். ஒரு சில திருத்தங்களை நான் கடுமையாக ஆட்சேபிக்கிறேன். சென்னை நகரசபைக்கும் அதுபோன்ற மற்ற ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் இப்போதுள்ள அதிகாரங்கள் அவசியம் இருக்கத்தான் வேண்டும். இந்த நாட்டில்

9th August 1965] [திரு. எஸ். கே. சம்பந்தன்]

மக்களாட்சி முறையில் அதிகாரங்கள் பரவலாக இருக்கவேண்டும் என்று ஆளும் கட்சியினரே அடிக்கடி சொல்லி வருகின்றனர். அப்படி இருக்கும்போது, நகரசபைகளுக்கு அதிகாரங்களை அதிக மாகவே கொடுத்து வரவேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன். நகரசபைகளின் காரியங்களைக் கண்காணிக்கவும், அவைகள் அடிக்கடி செய்யும் தவறுகளைக் கண்டிக்கவும் அரசாங்கத்திற்கு அதிகாரம் இருபகவேண்டியதுதான். ஆனால் அதற்கெல்லாம் இப்போதே அரசாங்கத்திற்கு அதிகாரங்கள் இருக்கின்றன. அப்படி இருக்க, கல்கத்தா நகரசபைச் சட்டத்திலும், டெல்லி நகரசபைச் சட்டத்திலும், நம் ராஜ்ய டிஸ்ட்ரிக்ட் முனிசிபாலிடீஸ் சட்டத்திலும் உள்ள ஒரு அம்சத்தைக் காட்டி, நகரசபை தவறு செய்யும்போது அதை "ஸுபர்ஸீட்" பண்ணுவதற்கு சட்டத்தில் வகைசெய்வது இந்தக் காலத்திற்கு ஏற்றதா, தேவையா என்று எனக்குத் தெரியவில்லை. இது தேவைதான் என்று ஒரு விதத்தில் வாதம் செய்தால் அதை நானும் முழுமனதுடன் ஆதரிப்பேன். ஆனால், இப்போதுள்ள அரசாங்கம் நேர்மையாகவும் நியாய மாகவும் நடக்கிறதா, இந்த அரசாங்கத்திற்கு இந்த அதிகாரங்கள் இருக்கக்கூடாது என்று என் போன்றவர்கள் எண்ண வேண்டி யிருக்கிறது. இந்த அரசாங்கத்திடம் நியாயமும் நேர்மையும் இல்லை என்பதற்கு நூற்றுக்கணக்கான உதாரணங்கள் சொல்ல முடியும். பஞ்சாயத்துக்கள் சம்பந்தமாக ஒரு சிறு உதாரணத்தை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். சமீபத்தில் இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடந்தபோது, சென்னைக் கார்ப்பரேஷன் உட்பட பல நகரசபைகள் இந்தியை எதிர்த்துத் தீர்மானங்கள் நிறை வேற்றின. அது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்தபோது, அந்தத் தீர்மானங்களை ஏன் ரத்து செய்யக் கூடாது என்று அவைகளை அரசாங்கம் கேட்டது. நான் இதை மிக மிக வரவேற்கிறேன். பஞ்சாயத்துக்கள், நகரசபைகள் முதலிய ஸ்தல ஸ்தாபனங்கள் தாங்கள் கவனிக்கவேண்டிய காரியங் களைத்தான் கவனிக்கவேண்டும் என்ற கருத்துக்கு நான் முழு ஆதரவு கொடுக்கிறேன். நான் ஒரு பஞ்சாயத்தின் தலைவன். எங்கள் பஞ்சாயத்தில் இந்த நியதியைக் கூடியவரை கடைப் பிடிக்கிறோம். பல நகரசபைகளில் அரசியல் தலைவர்களுக்கு 'வெல்கம் அட்ரெஸெஸ்' சர்வசாதாரணமாகக் கொடுக்கப்படு கின்றன. சமீபத்தில், ஒரு நகரசபை 'ஆர்ச்' அமைப்பு கட்டக் கூடாது என்று சென்னை உயர்நீதி மன்றம் தடை விதித்திருப்பதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அந்த நகரசபையின்மீது அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுத்திருக் கிறதா ? ஆட்சியிலுள்ளவர்கள் தங்கள் கட்சியைச் சேர்ந்தவர்களின் ஆட்சியில் உள்ள நகரசபைகள் தவறு செய்தால் அதைக் கண்டிப்ப தாகத் தெரியவில்லை. இந்தி பிரச்னை மக்கள் பிரச்னையாக இருக் கிறது. அப்படிப்பட்ட விஷயத்தில் மக்களின் கருத்துப் பிரதி பலிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சென்னை நகரசபை நிறை வேற்றிய தீர்மானத்தை அரசாங்கம் ஏன் அனுமதிக்கக்கூடாது? இந்த மசோதாவில் அரசாங்கத்திற்கு அளிக்கப்படும் அதிகமான

[திரு. எஸ். கே. சம்பந்தன்] [9th August 1965

அதிகாரங்கள் துஷ்பிரயோகப்படுத்தப்படுமோ என்று ஐயுறுகிறேன். எனவே நான் ஆட்சேபிக்கும் ஷரத்துக்களையாவது கைவிடவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

கார்ப்பொரேஷன் கமிஷனர் முதலிய அதிகாரிகளை இப்போது 5-10 p.m. அரசாங்கம் நியமித்துவருகிறது. கமிஷனருக்குக் கீழுள்ள அஸிஸ்டெண்ட் கமிஷனர் உத்தியோகம், இலாகாக்களின் தலைவர்கள் உத்தியோகம் ஆகிய உத்தியோகங்களுக்கு சர்க்கார் கொடுக்கும் பெயர்களிலிருந்து ஆட்களை கார்ப்பொரேஷன் பொறுக்கியெடுத்து நியமிக்கிறது. இந்த சிறு அதிகாரத்தைக் கூட ஏன் கார்ப்பொரேஷனிடமிருந்து அரசாங்கம் பறிக்க வேண்டும் என்று எனக்குப் புரியவில்லை. ஒருசில நாட்களுக்கு முன் ஆளும் கட்சியில் உள்ளவர்கள் கூட—சட்டசபை அங்கத்தினர்கள் என்று சொன்னால் கூட மிகையாகாது—என்னிடம் சில குறைபாடுகளைத் தெரிவித்தார்கள். ஒரு எம்.எல்.ஏ.-யின் விருப்பத்திற்கிணங்க ஒரு மாவட்டக் கலெக்டரை மாற்ற அரசாங்கம் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. ஆசிரியர்கள் ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கு மாற்றப்படுவதற்கு அரசாங்கத்தின் அதிகாரங்கள் பயன்படுத்தப்படுவதாகத் தெரிகிறது. இவர்கள் இன்னும் மாற்றப்படவில்லை; இது சம்பந்தமாக ஆர்.டி.ஓ.-வை அங்கத்தினராகக் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது இதையெல்லாம் பார்க்கும்போது, பஞ்சாயத்து யூனியனின் அதிகாரங்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அஸிஸ்டெண்ட் கமிஷனர் உத்தியோகம் போன்ற உத்தியோகங்களுக்கு, அரசாங்கம் அனுப்பும் பெயர்களிலிருந்து உத்தியோகஸ்தர்களை நியமிப்பதற்கு கார்ப்பொரேஷனுக்கு இருக்கும் சிறு அதிகாரத்தைக் கூட அரசாங்கம் ஏன் எடுத்துக்கொள்ள வேண்டும்? எல்லா அதிகாரங்களையும் அரசாங்கம் எடுத்துக் கொள்ளவேண்டுமென்றால், நகரசபைகள் இருக்க வேண்டியதில்லை; ஊராட்சி மன்றங்கள் தேவை இல்லை. அதிகாரங்கள் பரவலாக இருக்கவேண்டும் என்று சொல்லும் இந்த அரசாங்கம் ஏன் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இருக்கும் அதிகாரங்களையும் தானே எடுத்துக் கொள்ளவேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. இதை அரசாங்கம் முக்கியமாகக் கவனிக்க வேண்டுமென்று சொல்லிக் கொள்கிறேன். இந்த சந்தர்ப்பத்தில் மேலை நாடுகளில் இந்த மாதிரி நகரசபைகளுக்கு எந்தவிதமான அதிகாரம் இருக்கிறது என்பதையும் குறிப்பாக சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன். பல அமெரிக்க நாடுகளில் போலீஸ் வைத்து நடத்துவதற்குக் கூட நகரசபைகளுக்கு அதிகாரம் இருக்கிறது. அப்படி அதிகாரம் இருப்பதால் நகரசபையில் உள்ளவர்கள் நேர்மையாக நடப்பதால் கனடா நாட்டில் ஒரு மாநிலத்தில் அந்த மாநில அமைச்சரை நகர சபை போலீசார் விசாரித்து அபராதம் விதிக்கும் அளவுக்கு ஆட்சி நடக்கிறது. அப்படிப்பட்ட நகரசபைகள் உள்ள நாடு ஜனநாயக நாடு என்று சொல்வதா, இருக்கிற அதிகாரத்தைப் பறிக்கிற அரசாங்கத்தை ஜனநாயக அரசாங்கம் என்று சொல்வதா

9th August 1965] [திரு. எஸ். கே. சம்பந்தன்]

என்று புரிந்துகொள்ளமுடியவில்லை. நகரசபைகளுக்கு மேலும் மேலும் அதிகமாக அதிகாரத்தைக் கொடுத்து நல்லமுறையில் அவர்கள் அவற்றைப் பயன்படுத்தும்படி செய்து அரசாங்கம் கண் காணிக்க வேண்டுமே தவிர இருக்கக்கூடிய அதிகாரத்தை எடுத்துக்கொண்டு, நினைத்தால் கலைத்துவிடுவோம் என்று ஆட்சி செலுத்துவது நகரசபைகளை வாழவிடுவது ஆகாது என்ற கருத்தைச் சொல்லி முக்கியமாக மற்ற சட்டங்கள் இருந்தாலும் அதிகாரங்கள் இருந்தாலும் அசிஸ்டெண்ட் கமிஷனர் போன்றவர் களையாகிலும் நகரசபைகளில் அவர்கள் அமர்த்திக்கொள்ள அவர்களுக்குள்ள அதிகாரத்தை எடுக்கவேண்டாமென்று கூறி இத்துடன் என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

(Deputy Chairman in the Chair.)

DR. H. V. HANDE : Mr. Deputy Chairman, at the very outset, I want to emphatically say that this Bill is conceived very unfortunately, and it should not have been brought before this House. The time at which this Bill is brought forward is very inopportune, because up to now, in the State, there is a peculiar complexion in regard to municipal authorities. Some of the opposition members are in charge of the municipal bodies. Let us take for instance the Corporation of Madras. It is in the hands of the opposition members. When this Bill is brought forward at this inopportune moment, there is a feeling creeping among the public and among the opposition members that there is a motive behind this Bill and that this Bill will endanger the very tenets of democracy and the very right of forming an effective opposition. That fear lurks into the public mind. There is a real feeling in the public mind that hereafter it may not be advantageous and it may not be useful to form a healthy opposition. Because, if the Madras Government can take away the fundamental right of running the corporate bodies from the hands of the opposition, tomorrow what will be the consequence? Suppose, the Central Government take away the fundamental rights of the State Government. What would the State Government feel in the matter? Suppose the opposition parties form the State Governments, and the Central Government then say that the rights of the State Governments will be removed and that the State Governments will be superseded, how will the State Governments feel? It is very important that every one of us should realise that this Bill is a very dangerous Bill making in roads into the very fundamental right of the people to form a strong opposition under the democratic system of Government. I beseech this Government and the Chief Minister to withdraw this Bill or at any rate to send it to a select committee to see that certain clauses which seek to supersede the powers of the Mayor are removed. For this purpose, it is imperative that the Government should re-examine the whole Bill and see that some sort of confidence is retored among the public that opposition parties have a right to exist. Otherwise the Government can straightway remove the opposition parties and take up the one party system. This is a very important point which

struck me, as I was going through the Bill. What prevents the opposition from forming a majority in certain municipal bodies and taking charge of the administration of the local bodies by themselves? How, in the name of justice, I ask, all these years, the Government never thought of bringing forward this Bill and how suddenly now they have brought forward this Bill when the opposition parties are gaining strength? Already there is power for the Government to see that proper action is taken if the municipal bodies make mistakes. Even to-day they might do so. Regarding certain points about the allotment of houses, the Government have given instructions to the Commissioner. Even without the present Bill, it was possible for the Government to give instructions to the Commissioner and the Mayor to remove completely a particular resolution that they have passed. Why should they psychologically damage the public confidence in the opposition parties running the corporate bodies, is my question. Therefore, I request the Government and I beseech the Chief Minister to withdraw this Bill or at any rate send it to the select committee. Already the employees in the corporation are discharging their duties well. If the Government think that a certain amount of freshness should be infused among the employees, they can provincialise them and withdraw this particular section which seeks to remove the powers from the Corporation. The Government can give better facilities to the employees; they can transfer them from one department to another or to the State Government and put some State Government employees in the Corporation. That would be all right and will solve the problem also. The question of administration is not the only one thing that has to be taken into consideration. The question of opposition parties coming to power must be taken into consideration. If the opposition parties express a particular view, why should we deny them that right to express their viewpoint?

Sir, I do not want to take any more of the time of the House. The only thing I want to stress is that my point is perfectly possible of adoption. The Government must realise their responsibility in allowing a healthy opposition to come up and in allowing a democratic set up to function in our State. The most essential thing in a democracy is that the opposition party should develop fully. The Government should see that no psychological damage is done to the confidence of the people in running the municipal bodies. The Government should see what will happen if this Bill is passed into an Act.

With these words and with the hope that the Chief Minister will accept the amendment to refer this Bill to a select committee, I resume my seat, Sir.

5-20 p.m.

* திரு. என். வி. நடராசன் : கனம் துணைத் தலைவர் அவர்களே, மாநகராட்சி மன்றத் திருத்த மசோதாவின் மீது கனம் உறுப்பினர் திரு. க. அன்பழகன் அவர்கள் கொண்டுவந்த திருத்தத்தை வழி மொழிகின்ற வகையில் எனது கருத்தைக் கூற விரும்புகிறேன். நான் இங்கே சட்டப் பிரச்னைகளை எடுத்துக் கூற விரும்பவில்லை,

9th August 1965] [திரு. என். வி. நடராசன்]

அந்தச் சட்டத் துறையிலும் அதிகமான அனுபவமோ அல்லது சட்டத் துறையில் அதிக ஞானம் பெற்றவன் என்றோ சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. நான் அறிந்தவரையில் சர்க்கார் முன்பு, குறிப்பாக முதலமைச்சர் முன்பு சில கருத்துக்களை வைக்க விரும்புகிறேன். மாநகராட்சியின் நடவடிக்கைகளை சர்க்கார் கண்காணிப்பதற்கான பல விதிமுறைகள் சட்டத்தில் இருப்பதாக அறிகின்றேன். குறிப்பாக மாநகராட்சியின் ரிகார்டுகளை எந்த நேரத்திலும் தருவித்து பார்த்து அதிலுள்ள குறைபாடுகளை கவனிப்பதற்கு சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறது. உரிமை இருக்கிறது. அது 40-வது விதியின் அடிப்படையில் இருக்கிறது. அதேபோல மாநகராட்சியின் ரிகார்டுகளை நேரடியாக போய் பரிசீலனை செய்வதற்கு சர்க்காருக்கு போதிய அதிகாரம் இப்போது உள்ள நிலையிலேயே இருக்கிறது. அது 41-வது விதியின் அடிப்படையில் இருக்கிறது. அதேபோல சென்னை மாநகராட்சி மன்றம் சர்க்காருக்கு அதிருப்தியாக நடந்தால் அந்த குறிப்பிட்ட பிரச்னையைக் காட்டி அதில் இந்த விதமாகத்தான் நடக்கவேண்டுமென்று அவற்றிற்கு கட்டளையிட சர்க்காருக்கு அதிகாரம் 42-வது விதியின் அடிப்படையில் இருக்கிறது. அது போதாது என்று எந்தக் காரியத்திலாகிலும் கார்ப்பரேஷன் சரியாக நடக்கவில்லை என்றால் பிரத்தியேக அதிகாரியை நியமிக்கவும், இப்படித்தான் செய்யவேண்டுமென்று கட்டளையிடவும், கார்ப்பரேஷன் நிதியிலிருந்து அவருக்கு சம்பளம் தரவேண்டுமென்று ஆணை பிறப்பிக்கவும் 43-வது விதியின் அடிப்படையில் சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறது. கார்ப்பரேஷனின் எந்தத் தீர்மானத்தையும் சர்க்காருக்கு 15 நாட்களுக்குள் அனுப்பி வைக்க வேண்டும். அப்படி அனுப்பப்படும் தீர்மானங்களுக்கு 15 நாட்களுக்குள் சர்க்கார் ஒப்புதல் அளித்தால்தான் தீர்மானங்கள் நடைமுறைக்கு வந்ததாகக் கொள்ளமுடியும் என்ற உரிமை 43-வது விதியில் அளிக்கப்பட்டிருக்கிறது. அண்மையில் இந்தி எதிர்ப்பு கலவரத்தின் காரணமாக சில நகர மன்றங்கள் நிறைவேற்றிய கண்டனத் தீர்மானங்கள், அனுதாபத் தீர்மானங்கள் ஆகியவைகளை சர்க்கார் ரத்து செய்திருப்பதை கனம் முதலமைச்சர் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். மாநகராட்சி மன்றம் நிறைவேற்றும் தீர்மானம் இந்த முறையில்தான் நிறைவேற்றப்பட வேண்டுமென்று கட்டளையிடும் எல்லா உரிமைகளும் இருக்கும் போது, இந்தத் திருத்தத்திற்கு என்ன அவசியமென்று கேட்டுக் கொள்ள விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழகம் ஆளும் கட்சியாக மாநகராட்சியில் இருக்கிறது, எனவே அதைப் பழி வாங்க வேண்டுமென்ற எண்ணம் ஏதாவது சர்க்காருக்கு இருக்கிறதா என்பது எனக்கு ஐயப்பாடாக இருக்கிறது. இவ்வளவு அதிகாரங்களை வைத்துக்கொண்டு கார்ப்பரேஷனின் நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்குப் பதிலாக, ஜனநாயகம் வாழ வேண்டுமென்று சொல்லப்படுகின்ற இந்த நேரத்தில், மாநகராட்சியை சர்வாதிகாரப் போக்கில் கலைத்துவிடும் நோக்கத்தில் மாநகராட்சி மன்றச் சட்டத்தைக் கொண்டுவருவது, ஜனநாயக வளர்ச்சிக்கும், பண்புக்கும் ஊறு செய்வதாகும்

என்பதை அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறேன். எனவே இது மிகவும் முக்கிய பிரச்னையாக இருப்பதால், செலக்ட் கமிட்டிக்கு விடுவதன் மூலம், அங்கு நடைபெறும் விவாதத்தை வைத்து சர்க்கார் நல்ல முடிவெடுக்கத் துணையாய் அமையும். இந்தப் பிரச்னையில் சர்க்கார் ஜனநாயக உணர்வோடு நடந்தது என்பதற்கு அடையாளமாக குறைந்த பட்சம் இதை செலக்ட் கமிட்டிக்கு விடுமாறு கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**திரு. எம். சுப்பையா செட்டியார்** : கனம் தலைவர் அவர்களே, சென்னை நகர முனிசிபல் சட்டத் திருத்தத்தின் அடிப்படையில் சில வார்த்தைகள் சொல்ல அனுமதி கேட்டுக்கொள்கிறேன். இந்த மாதிரி திருததங்கள் தேவையா என்று யோசிக்கவேண்டி இருக்கிறது. ஜனநாயகத்தின் அடிப்படையில் "Government for the people. by the people" என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். அந்தக் குறிக்கோளை வைத்துத்தான் நாம் அரசாங்கம் நடத்துகிறோம் என்று ஓயாமல் சொல்லிக்கொண்டு வருகிறோம். அன்னிய ஆட்சி இருந்த காலத்தில் கூட முக்கியமாக நகராட்சிக்கும் சென்னை மாநிலத்திலுள்ள கார்ப்பரேஷன் போன்ற ஸ்தாபனங்களுக்குமுள்ள அதிகாரத்தைக்கூட எடுக்கவில்லை. அவற்றை அரசாங்கத்தின் கண்காணிப்பில் வைத்துக்கொள்ளவேண்டும். அவர்கள் ஏதாவது தவறு செய்தால் அந்த ஸ்தாபனத்தை கலைத்து விட்டு ஸ்பெஷல் ஆபீசர் மூலமாக அதிகாரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தோடு இந்த திருத்தம் வந்திருக்கிறது. கமிஷனர் போன்ற அதிகாரிகளைத்தான் அரசாங்கம் நியமித்து வந்தது. இப்போது அதற்குக் கீழேயுள்ள அதிகாரிகளையும் நியமிக்கவேண்டுமென்று சில திருத்தங்களைக் கொண்டுவந்திருக்கிறார்கள். ஆனால் எந்த முனிசிபாலிடியாக இருந்தாலும் கார்ப்பரேஷனாக இருந்தாலும் அவர்களுடைய ஆட்களுக்கு ஆட்சேபனை சொல்லமாட்டார்கள். 'அந்த மாதிரி அதிகாரிகளை அனுப்புகிறோம்; அவர்களால் உங்களுக்கு நிர்வாகம் எளிதாக இருக்கும்' என்று அனுமதி பெற்று அனுப்பினால் நலமாக இருக்குமென்று நினைக்கிறேன். ஜனநாயக ஆட்சி என்று சொல்லிக்கொண்டு மக்களுக்கு இருக்கிற சிறிய உரிமைகளை முனிசிபாலிடி போன்றவைகளின் காரியங்களில் குந்தகம் விளைவிக்கும் அளவில் எதற்காக செய்யவேண்டுமென்று அரசாங்கம் சிந்திக்கவேண்டும். மக்களாட்சி இந்த நாட்டில் நடக்கிறதா, இல்லையா என்று சந்தேகமாக இருக்கிறது. அரசாங்கம் செய்யவேண்டுமென்று நாங்கள் கேட்கும் போது அதிகமாகக் கூட கேட்கவில்லை. இந்தத் திருத்தத்தை செலக்ட் கமிட்டிக்கு அனுப்பி அங்கே விவாதம் நடத்தி அவசரப்படாமல் காரியங்களைச் செய்யவேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறோம். அதற்காவது அரசாங்கம் அனுமதி கொடுத்து மெஜாரிட்டி இருக்கிறது என்ற குறிக்கோளைக் கொள்ளாமல் செலக்ட் கமிட்டி மூலமாக இன்னும் தேவையான திருத்தத்தைக் கூட சேர்த்து செய்யலாம். அப்போது அரசாங்கம் நல்ல காரியம் செய்ய வழிவகை ஏற்படும். மெஜாரிட்டி பலத்தைக் கொண்டு அரசாங்கம் இதைச் செய்தார்கள் என்ற பழிச்சொல் ஏற்படாத

9th August 1965] [திரு. எம். சுப்பையா செட்டியார்]

வாறு, முக்கியமாக மெட்ராஸ் சிட்டி கார்ப்பரேஷனுக்கு மட்டும் இதை அவசரப்பட்டு செய்யவேண்டியதில்லை. மேல் நாடுகளில் உள்ளதைப்போல முனிசிபல் கார்ப்பரேஷன் போன்ற ஸ்தாபனங்களுக்கு அதிக அதிகாரம் வழங்க அரசாங்கம் முன்வரவேண்டுமே தவிர இருக்கிற அதிகாரத்தை எடுக்க நடவடிக்கை எடுக்கக் கூடாது என்று சொல்லி, செலக்ட் கமிட்டிக்கு இதை விட வேண்டுமென்று கூறி இந்த சந்தர்ப்பத்தை அளித்ததற்கு நன்றி தெரிவித்துக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**திரு. என். ஆர். தியாகராஜன்:** தலைவர் அவர்களே, நான் மதுரை ஜில்லா போர்டு தலைவனாக இருந்தேன். அப்படியிருந்த போது ஒருமுறை ஜில்லா போர்டு கலைக்கவேண்டுமென்று சட்ட மன்றத்தில் ஒரு தீர்மானம் வந்தது. ஸ்பெஷல் ஆபீசர் அனுப்ப வேண்டியிருந்தது. அப்போது ஜில்லா போர்டு செகரட்டரியாக வி. கே. ராமசாமி முதலியார் இருந்தார். அவர் அப்போது எனக்கு ஒரு கடிதம் எழுதினார். ஜில்லா போர்டு கலைப்பது அநீதி. ராஜாஜியிடம் அதைக் கலைக்கக்கூடாது என்று சொல்லிவிட்டு வர வேண்டுமென்று எழுதியிருந்தார். அவருக்கு நான் பதில் எழுதினேன். ஜில்லா போர்டு கலைக்கும் அதிகாரம் அரசாங்கத்திற்கு இருக்கிறது. அந்த அரசாங்கத்தை மக்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். அப்படி உள்ள அரசாங்கம் செய்தது தவறு என்று குறுக்கே நிற்கவும் கலைக்கவேண்டாமென்று கேட்கவும் தயாராக இல்லை. பதவியைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அங்கே வந்து கெஞ்சிக் கொண்டிருக்க முடியாது என்று தெரிவித்துவிட்டேன். ஜில்லா போர்டுகளைக் கலைத்து ஸ்பெஷல் ஆபீசரைப் போட்டார்கள். அதற்குப் பிறகு கூட சென்ற காலத்திலே கேரளாவிலே கம்யூனிஸ்ட் சர்க்கார் வந்தது. அந்த சர்க்காரைக்கூட கலைத்து விட்டு மத்திய சர்க்கார் அதிகாரத்தை மேற்கொண்டது. இப்பொழுதுகூட கேரளாவிலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் போதிய மெஜாரிடி இல்லை என்ற காரணத்தால் கவர்னர் ஆட்சி வந்தது. நான் என்ன நினைத்துக்கொண்டிருந்தேன் என்றால் இந்த சட்ட மன்றம் சர்வ வல்லமை வாய்ந்தது; எல்லாவித அதிகாரத்தையும் கொண்டது என்று நினைத்துக்கொண்டிருந்தேன். நான் ஜில்லா போர்டு தலைவராக இருந்தபோது சட்டமன்ற உறுப்பினராக இருப்பதுதான் மரியாதை, ஜில்லா போர்டு தலைவருக்கு எந்த அதிகாரமும் இல்லை, அப்படி இருப்பது பிரயோஜனமும் இல்லை என்று எண்ணினேன். சட்ட மன்றம்தான் உயர்ந்தது என்று எண்ணிக்கொண்டிருந்தேன். இந்த மசோதா வந்ததைப் பார்த்தால் 5, 6 தினங்களாக ஒரு சந்தேகம் வந்தது. இந்த சட்ட மன்றத்துக்கு ஒரு குட்டி கார்ப்பரேஷனைக்கூட கலைக்க அதிகாரம் இல்லாமல் இருந்ததா, அது இப்போதுதான் வரவேண்டுமா என்ற எண்ணம் வந்தது. இந்த கார்ப்பரேஷனைக் கலைக்கும் அதிகாரத்தைப் பெறுவது ஜனநாயகத்துக்கு உகந்தது அல்ல என்று கூறிக் கொண்டிருப்பது எனக்குப் புரியவில்லை. 5-30 p.m.

இந்தக் கார்ப்பரேஷனில் நடக்கும் சம்பவங்கள் முந்தாநாள் பத்திரிகையிலே பார்த்தேன். மெரீனு கான்டீனையே சாப்பிட்டு விட்டார்களாம். எல்லோரும் கான்டீனில் சாப்பிடுவார்கள். இவர்கள் கான்டீனையே சாப்பிட்டுவிட்டார்களாம். இதே மாதிரி குமுதம் பத்திரிகையில் ஒவ்வொரு வாரமும் தவருமல் கார்ப்பரேஷன் விஷயம்பற்றி பத்தி பத்தியாக மாறி மாறி எழுதிக்கொண்டிருக்கிருர்கள். இப்படி எழுதிக் கொண்டிருக்கும்போது இந்த கார்ப்பரேஷனைக் கலைக்கும் அதிகாரம் சர்க்காருக்கு இல்லையென்ருல் இந்த சர்க்கார் எதற்கு இருக்கிறது? இந்த அதிகாரம் மிகவும் அவசியம். கார்ப்பரேஷனிலே இருந்து எந்த அதிகாரத்தை எடுத்துவிட்டார்கள். 3 பேர் ஸ்டாண்டிங் கமிட்டி என்று சொல்லி 5 கோடி ரூபாயை பங்குபோட்டுக் கொள்கிருர்கள். அந்த அதிகாரம் அப்படியே இருக்கவேண்டும் என்பதுபோல் இருக்கிறது கனம் சுப்பையா செட்டியார் அவர்கள் சொல்வது.

**திரு. எம். சுப்பையா செட்டியார்:** நண்பர் அவர்கள் சொன்ஞர்கள். ஐந்து கோடி ரூபாயை பங்குபோட்டுக் கொள்கிருர்கள் என்று. ஐந்து கோடி ரூபாயை பங்கு போடுகிற ஆட்களை இன்று அரசாங்கம் தண்டிக்க பல சட்டங்கள் இருக்கின்றன. அந்த சட்டங்களை மறந்துவிட்டார் என்று நினைக்கிறேன். ஐந்து கோடி ரூபாய் அல்ல, ஒரு பைசாவை திருடியவனைக்கூட பிடிப்பதுதான் அரசாங்கத்தின் முக்கிய வேலை.

**திரு. கே. எஸ். அப்துல் வகாப்:** on a point of order sir, மூன்று பேர் சேர்ந்து 5 கோடி ரூபாயை பகிர்ந்து எடுத்துக் கொண்டார்கள் என்ற குற்றச்சாட்டை சொல்கிருர். அதை எடுத்து வாதடுவதற்கு அவர்கள் இந்த சபையிலே இல்லை. சபையில் இல்லாதவர்கள் மீது குற்றச்சாட்டை சொல்லத் துவங்கலாமா?

**டெபுடி சேர்மன்:** கனம் அங்கத்தினர் அடுத்தாற்போல் பேசும் போது சொல்லலாம்.

**திரு. என். ஆர். தியாகராஜன்:** 5 கோடி எடுக்கவில்லை என்ருல் ஆளுக்கு ஒரு கோடி என்று சொல்லுங்கள். எனக்கு ஆட்சேபமில்லை. இந்த கார்ப்பரேஷன் நிர்வாகத்திலே இருக்கக்கூடியவர்கள், ஊழல்கள் இல்லாமல் மாறி விடவேண்டும் என்பதற்காகத் தான் இந்த தீர்மானம் வந்ததாக நான் எண்ணுகிறேன். இத்தகைய பயமுறுத்தும் தீர்மானம் ஒன்று ஏதேனும் தவறு செய்தால், 'உங்களைத் தண்டித்துவிடுவோம், கார்ப்பரேஷனையே கலைத்து விடுவோம்' என்ருல் அங்கே இருப்பவர்கள் ஜாக்கிரதையாக இருப்பார்கள். நாம் கவனிக்காமல் விட்டால், அவர்கள் இஷ்டம்போல் ஆட்டமெல்லாம் ஆடி அந்த கட்சிக்கே கெட்ட பெயரைக் கொண்டு வந்துவிடுவார்கள். அந்த கெட்ட பெயர் வராமல் தடுக்கத்தான் இந்த திருத்த மசோதா வருகிறது. ஆகவே திருத்தத்தை வாபஸ் வாங்கிக்கொண்டு இந்த மசோதாவை அன்பழகன் அவர்கள் ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

9th August 1965]

* திரு. கே. எஸ். அப்துல் வகாப் : சட்ட மன்ற உபத் தலைவர் அவர்களே, சென்னை மாநகராட்சி சட்டத் திருத்த மசோதா கொண்டு வரப்பட்டு இருப்பதை பூரணமாக எல்லோரும் ஆதரிக்க கூடிய நிலை இல்லை என்பதை நாம் உணர்கின்றோம். அதற்குக் காரணம் இந்த மசோதா கொண்டுவந்த சூழ்நிலை அப்படி உண்மையிலேயே நல்ல கருத்துடன் கொண்டு வரப்பட்டதோ இல்லையோ, அது கொண்டுவரப்பட்ட சூழ்நிலை அரசாங்கத்தினுடைய 'மோடிவை' ( Motive ) சந்தேகப்படக்கூடியதாக செய்கிறது. அங்கு ஆட்சி பீடத்திலே வீற்றிருப்பவர்கள் யார் என்பதை வைத்துப் பார்த்தால் இந்த மசோதாவை கொண்டுவரும் கட்டம், சந்தர்ப்பம், இந்த சந்தேகத்தை கிளப்ப அடிப்படையாக அமைகிறது. இன்றைக்கு இந்த நாட்டில் குறிப்பாக நம் மாகாணத்தில் உள்ள முனிசிபாலிடிகளும், பஞ்சாயத்து யூனியன்களும் தங்களுக்கு கூடுதலான அதிகாரம் வேண்டுமென்று கோரிக்கை சொல்லிக்கொண்டே வருகின்றார்கள் பல ஆண்டுகளாக. ஆனால் கொண்டுவரப்படும் இந்த மசோதாவைப் பார்த்தால் அந்த கோரிக்கைக்கு தலைகீழாக அமைந்து இருக்கிறது. உள்ள அதிகாரங்கள் கூடுதலாக்க வேண்டுமென்று மக்கள் கோரிக்கையை சமர்ப்பித்த நிலையில் கூடுதலாக கொடுக்க முடியாதது மட்டுமன்றி உள்ள அதிகாரங்கள் அப்படியே வைத்து இருக்கக் கூடிய நிலை மாறி உள்ளதையும் பறிக்கக்கூடிய சட்டம் வந்தால் அது பொது மக்களுடைய வெறுப்பை அதிகமாக அரசாங்கம் சம்பாதித்துக் கொள்வதற்கு வகை செய்யக்கூடியதாகும். இந்த மசோதாவை பிரேரேபித்து பேசிய நமது மதிப்புக்குரிய முதலமைச்சர் அவர்கள் சொன்னார்கள். முனிசிபாலிடி ஆக்ட் 41-ஆவது ஷரத்திலே எல்லா முனிசிபாலிடிகளையும் வரம்புமீறி செயல்படும் கட்டங்களிலே கலைத்துவிடுவதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த அதிகாரம் கார்ப்பரேஷன் சட்டத்துக்கு இல்லாமல் இருந்தது. அதற்கும் கொண்டு வருவதற்குத்தான் இந்த சட்டம் கொண்டுவரப்படுகிறது என்று சொன்னார்கள். நான் சொல்கிறேன் முனிசிபாலிடி சட்டத்தின் 41-வது ஷரத்தின்படி அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரம் சரியான முறையில் பிரயோகிக்கப்படுகின்றதா, நியாயமாக நிர்வகிக்கப்படுகின்றதா என்று மக்கள் கேட்கக்கூடிய நிலையை உருவாக்கி இருக்கிறது அரசாங்கம். உதாரணத்துக்கு சொல்லவேண்டுமென்றால் எல்லா முனிசிபாலிடிகளிலும் எல்லா ஆண்டுகளிலும் சாதாரணமாக மதிப்பு வாய்ந்த தலைவர்கள் வந்தால் வரவேற்பு அளிப்பதும் அவர்களுடைய படங்களை திறந்து வைப்பதும் அன்றாட நடவடிக்கையாக இருப்பதை நாம் காண்கின்றோம். திருநெல்வேலி முனிசிபாலிடியிலே சமீபத்திலே அருமை நண்பர் அறிஞர் அண்ணா அவர்களுடைய படத்தையும், நமது இஸ்லாமிய சமுதாயத்தின் தனிப் பெருந்தலைவர் கண்ணியத்துக்குரிய காய்தே மில்லத் அவர்களுடைய படத்தையும் திறந்து வைத்தார்கள் என்ற ஒரே காரணத்துக்காக அந்த முனிசிபாலிடியை ஏன் கலைக்கக்கூடாது என்று அரசாங்கம் கேட்க முன் வந்தது என்றால் இந்த 41-ஆவது ஷரத்தின்படி அளிக்கப்பட்ட

[திரு. கே. எஸ். அப்துல் வகாப்] [9th August 1965

அந்த அதிகாரம் துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது என்று சொல்லும் குற்றச்சாட்டு நியாயமான குற்றச்சாட்டாகும். இப்படி மக்கள் அதிருப்தி அடையக்கூடிய வகையில் துஷ்பிரயோகம் செய்யக்கூடிய சட்டத்தை வைத்துக்கொண்டு மேலும் அதை விஸ்தரிக்க முற்படுவது வரவேற்கத்தக்கதல்ல, நியாயமானதல்ல என்று சொல்ல விரும்புகிறேன்.

இன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழகம் கார்ப்பரேஷனில் ஆளும் கட்சியாக இருக்கிறது. அதே இடத்தில் இன்றைக்கு காங்கிரஸ் கட்சி கார்ப்பரேஷனில் ஆளும் கட்சியாக இருந்தால் நிச்சயமாக இன்றைக்கு இந்தச் சட்டம் வந்திருக்காது என்று நான் உறுதியாக சொல்வேன். ஒரு பள்ளம் மற்றவர்களைத் தள்ளுவதற்கு வெட்டினால் அந்தப் பள்ளத்தில் வெட்டுபவர்களே சில சமயங்களில் விழுந்துவிடுவார்கள். அந்த நிலையான முடிவு கொடுக்கக்கூடிய மசோதாதான் இந்த சட்ட திருத்த மசோதா என்று குறிப்பிட விரும்புகிறேன். இன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழகம் அங்கே ஆட்சிபீடத்திலே இருக்கிறது. இன்றைக்கு இந்த மாகாண ஆட்சி பொறுப்பிலே காங்கிரஸ் வீற்றிருக்கிறது. ஒரு காலத்தில் இது தலைகீழாக மாறலாம். கார்ப்பரேஷனிலே காங்கிரஸ் ஆளும் கட்சியாக இருந்து இந்த மாகாண ஆட்சி பீடத்தில் திராவிட முன்னேற்றக் கழகம் இருந்து இந்த மசோதாவை அமுல் படுத்தக்கூடிய கட்டம் வந்தால் அந்த நிலையில் இது எவ்வளவு அக்கிரமமானது, அநீதியானது என்று காங்கிரசைச் சேர்ந்தவர்கள் சொல்வார்கள். இந்த சட்ட திருத்த மசோதா எந்த நோக்கத்துடன் கொண்டுவரப் படுகின்றது என்பதற்கு ஒரு 10 வரிகள் கொண்ட கருத்து ஒரு பத்திரிகையிலே உள்ளதை படித்தால் மிகப் பொருத்தமாக இருக்கும் என்று எண்ணுகிறேன். "சென்னை நகர சபை கடந்த பிப்ரவரி மாதம் 18உ ஒரு தீர்மானம்......"

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன்** : படிக்கக்கூடாது. அதிலே இருக்கிறதை சொல்லலாம்.

**திரு. கே. எஸ். அப்துல் வகாப்** : இந்தி எதிர்ப்பு போராட்டத்தை ஒட்டி சென்னை நகர சபை நிறைவேற்றிய தீர்மானத்துக்காக அரசாங்கம் அதை வாபஸ் வாங்க வேண்டுமென்று நோட்டீஸ் கொடுத்ததாகவும், அந்த நோட்டீசின் பேரில் மாநகராட்சி மன்றம் மறுபடியும் கூடி சிந்தித்து 30உ தான் முதலில் தீர்மானித்த தீர்மானத்தை மறுபடியும் ஊர்ஜிதம் செய்ததாகவும், அதைத் தொடர்ந்து இந்த அரசாங்கம் அந்த மாநகராட்சி மன்றத்தின்மீது நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கமிஷனருக்கு உத்தரவு இட்டதாகவும் இந்த செய்தி கூறுகின்றது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : இருந்ததாகவும் எனக்கு தெரிகிறது என்று சொல்லவேண்டும்.

9th August 1965]

**திரு. கே. எஸ். அப்துல் வகாப் :** இந்த மாதிரி மக்களால் பேசப் படுகிறது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** என்ன உத்தரவு போடப்பட்டிருக்கிறது ?

**திரு. கே. எஸ். அப்துல் வகாப் :** சென்னை நகரசபை நிறைவேற்றிய இந்த ஹிந்தி எதிர்ப்புத் தீர்மானத்தை ரத்துசெய்ய அரசாங்கம் நகரசபைக்கு உத்தரவு அனுப்பியது. இந்த உத்தரவில், சென்னை நகரசபை இந்த எதிர்ப்புத் தீர்மானத்தை நிறைவேற்றியது ஏன் என்று காரணம் காட்டுமாறு அரசாங்கம் நோட்டீஸ் அனுப்பியது. ஒரு மாதத்திற்குள் நகரசபை பதில் எதுவும் அனுப்பவில்லை. தீர்மானத்தை ரத்து செய்யுமாறு நகரசபைக்கு அரசாங்கம் கூறியது. இது சம்பந்தமாக தகுந்த நடவடிக்கை எடுக்குமாறு நகரசபை அதிகாரிக்கும் (கமிஷனருக்கும்) உத்தரவிடப்பட்டுள்ளது.

இந்த அடிப்படையில் பார்த்தால், ஹிந்தியை எதிர்த்து இந்த நகரசபை தீர்மானம் போட்டதால் இந்த நகரசபையினரைப் பழி வாங்க வேண்டுமென்ற நோக்கத்துடன்தான் எப்போது நினைத்தாலும் இந்த நகரசபையைக் கலைத்துவிடுவதற்கான அதிகாரத்தைத் தான் பெற்றுக்கொள்வதற்கு சட்டத்தில் வகை செய்வதற்கான இந்த மசோதா, ஜனநாயக அடிப்படையை அதிரச் செய்யக் கூடியது. இந்த மசோதாவை சட்டமாக்க வேண்டுமென்று வற்புறுத்துவது நியாயமற்றது. இந்த மசோதாவில் வேறு சில அம்சங்கள் வரவேற்கத்தக்கவையாக இருந்தாலும், மாநகராட்சியைக் கலைப்பது சம்பந்தப்பட்ட ஷரத்தை நீக்க வேண்டும் அல்லது மதிப்பிற்குரிய நண்பர் திரு. அன்பழகன் பிரேரபித்துள்ள திருத்தத்தின்படி இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்காவது விட வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன். பேசுவதற்கு எனக்கு வாய்ப்பு அளித்த தங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடிக்கிறேன். 5-40 p.m.

**திரு. எம். எத்திராஜுலு :** கனம் உதவித் தலைவர் அவர்களே, இந்த மசோதா ஜனநாயக அடிப்படையில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதை சர்க்கார் முன்னதாகவே கொண்டு வந்திருந்தால் மிகவும் நன்றாக இருந்திருக்கும். சென்னை மாநகரத்தில் ஏழை மக்கள் எவ்வளவோ அவதிக்கு ஆளானார்கள். இந்த மசோதா இப்போதாவது வந்ததே என்று மகிழ்ச்சி யடைகிறேன். இந்த மசோதா வருவது குறித்து இன்று சென்னையில் சந்தோஷப் படாதவர்கள் யாரும் இல்லை. இந்த மசோதாவைக் கொண்டுவந்ததற்காக இந்த சர்க்காருக்கு நாம் எல்லோரும் நன்றிசெலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். சென்னை நகரசபையில் திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள் அதிகாரத்தில் இருப்பதால் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருப்பதாகக் கருதுவது முற்றிலும்

[திரு. எம். எத்திராஜுலு] **[9th August 1965**

தவறு. கடந்த காலத்தில் ஒரு ஊரில் இரண்டு ஆட்சிகள் இருந்த போது மக்கள் எவ்வளவு அவதிப்பட்டிருக்கிறார்கள் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

(Mr. Chairman in the Chair)

ஜனநாயகத்தில் அரசாங்க அலுவலகங்களை அனுசரித்து ஸ்தல ஸ்தாபன அலுவலகங்கள் நடக்க வேண்டும் என்ற அடிப்படையில் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறதே தவிர, மாநகராட்சியைப் பழிவாங்க வேண்டுமென்ற நோக்கத்துடன் இது கொண்டு வரப்படவில்லை. இது முற்றிலும் நல்ல மசோதா. இந்த மசோதாவை ஆதரிக்கிறேன். இத்துடன் என் வார்த்தையை முடிக்கிறேன்.

**திரு. க. அன்பழகன்** : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, 1919-ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சென்னை மாநகராட்சிச் சட்டத்தைத் திருத்துவதற்காகக் கொண்டுவரப்பட்டுள்ள இந்தத் திருத்த மசோதாவைப் பொறுக்குக் குழுவின் ஆய்விற்கு விட வேண்டுமென்ற பிரேரணையை வற்புறுத்தி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மசோதாவானது, 1919-வது ஆண்டிலிருந்து 1965-வது ஆண்டு வரையில்—அதாவது ஏறத்தாழ 45 ஆண்டுகள்—தொடர்ந்து இயங்கிவந்த சட்டம் போதாது என்று கருதப்பட்டு, திடீரென்று ஆளும் கட்சியினரின் ஆர்வத்தால் இங்கே கொண்டுவரப்படுகிறது. இத்தனை ஆண்டுகள் வரையில் மாநகராட்சி இயங்கப் போதுமானதாக இருந்த சட்டம் இப்போது தான் போதுமானதாக இல்லை என்ற முடிவிற்கு மதிப்பிற்குரிய அமைச்சர்கள் வருகிறார்கள் என்றால், இப்போது மாநகராட்சி மன்றத்தின் மீது என்னென்ன குற்றங்களைச் சாட்ட ஆளும் கட்சியினர் விரும்புகின்றனரோ அவைகளைவிட அதிகமான குற்றங்கள் சாட்டப்படத்தக்க விதத்தில் இதற்கு முன்பு ஆளும் கட்சி மாநகராட்சியில் அதிகாரத்தில் இருந்தபோது அது நடந்து கொண்டிருந்தது என்று கூற விரும்புகிறேன். இன்று சாட்டப்படும் குற்றங்கள் உண்மையாக நடந்தவையாகக் கருதப்பட்டாலும், அவை முன்பு நடக்காதவை அல்ல என்பதை நான் வாதிட்டு நிலைநாட்ட முடியும்.

நிர்வாகத்திலுள்ள குறைகளைப் போக்க இந்த மசோதா கொண்டு வரப்படுவதாக மதிப்பிற்குரிய அமைச்சர்கள் கூறுகிறார்கள். அப்படியானால், அந்த வகையில் சட்டம் திருத்தப்பட வேண்டும். என்னென்ன நடவடிக்கைகள் தனிப்பட்ட முறையில் எடுக்கப்பட முடியாமல் கமிஷனர் மூலம் நிறைவேற்றப்பட வேண்டுமோ அதற்கான வழிகள் ஆராயப்பட வேண்டும். இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு முன்பு மாநகராட்சி நிர்வாகத் துறை மாற்றியமைக்கப்பட்டது. அதற்குப் பிறகு தான் மத்தியக் குழுவும் வட்டாரக் குழுக்களும் அமைக்கப்பட்டன; பல்வேறு தலைவர்கள் நியமிக்கப்பட்டனர். இப்போது மேயரும் மத்தியக் குழுத் தலைவரும் வட்டாரக் குழுக்களின் தலைவரும் பொறுப்பேற்றுத் தான் அந்த அந்த காரியங்கள் செய்யப்படுகின்றன. ஐந்து கோடி, ஆறு கோடி

9th August 1965] [திரு. க. அன்பழகன்]

ரூபாயை மூன்று பேர்கள் பங்கிட்டுக்கொள்கிறார்கள் என்று சொல்வது சரியாகாது. மாநகராட்சி அதற்கு நிச்சயம் இடம் தராது.

சிற்றுண்டி விடுதிகளை ஏறத்தாழ 16 ஆண்டுகளாக வாடகைக்கு விட்டதில் என்ன வாடகைக்கு அவை விடப்பட்டனவோ அதை விடச் சற்று அதிகமான தொகைக்கு வாடகைக்கு விட்டிருந்தால் ரூ. 1,15,000 அதிகமாக வசூலித்திருக்க முடியும் என்று அதிகாரிகள் சொல்லியிருக்கிறார்கள். அதனால் அங்கே ஊழல் இருக்கிறது என்று சொல்ல முடியாது.

அதிகாரிகள் தவறு செய்தால் அது சம்பந்தமாக நடவடிக்கை எடுக்க அரசாங்கத்திற்கு இப்போது போதிய உரிமைகளும் அதிகாரங்களும் இருக்கின்றன. மாநகராட்சி மன்றத்திலுள்ள கமிஷனரும் அங்குள்ள இலாகாக்களின் தலைவர்களான ஹெல்த் ஆபீசர், என்ஜினியர்கள் போன்றவர்களும் அரசாங்கத்தால் நியமிக்கப்பட வேண்டும் என்றால், அதை நான் வரவேற்பேன். அவர்கள் அரசாங்க ஆலோசனையுடன் நியமிக்கப்பட வேண்டும் என்றால், அதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இந்த ஆட்சி தவறு செய்கிறது என்று ஆளுகிற காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் கருதுகிற காரணத்திற்காக அதைக் கலைக்கிற அதிகாரம் வேண்டுமென்று கேட்பது நிச்சயமாக சொல்வேன் சட்டமன்றத்திலோ அல்லது சட்டசபையிலோ நிறைவேற்றப்பட்டாலும் அதற்கு ஆளும் கட்சி செல்வாக்கு வலிவு காரணமே தவிர நீதி காரணமாகாது. கலைக்க வேண்டுமென்று சொல்லும்போது அதிலிருக்கிற உள் நோக்கத்தை எதிர்க்கட்சியினர் எடுத்துக் காட்டினார்கள். இந்த மசோதாவில் என்ன நோக்கம் வற்புறுத்தப்படுகிறதோ அது முன்பே சொல்லப் பட்டுவிட்டது. 1963-ல் நடைபெற்ற மாநகராட்சி தேர்தலில் 5-50 p.m. திராவிட முன்னேற்றக் கழகம் பெருவாரியான வெற்றி பெற்றவுடன் அதைக் கண்டிக்கும் வகையில் காங்கிரஸ் பேச்சாளர்களும் தலைவர்களும் மேடையிலே பேசியதைக் கேட்டோம். இவர்கள் எத்தனை நாளைக்கு கார்ப்பரேஷனிலே இருக்கமுடியும்? அப்படி இருக்கவிடுவோமா, கலைத்துக் காட்டுவோம், என்று மேடையில் சொன்னார்கள். இன்று கலைக்கச் சட்டம் கொண்டுவந்துவிட்டார்கள். காங்கிரஸ் பேச்சாளருக்கு அரசாங்கம் பெற்றிருக்கிற உரிமையில் அத்தனை துணிவு எப்படி ஏற்பட்டது? பெரும்பாலான வலிவு உங்களுக்கு இருப்பதால் எதையும் சட்டமாக நிறைவேற்றிக் கொள்ள முடிகிறது. அதைத் தடுக்க என்ன வழி எங்களிடத்தில் இருக்கிறது? வேண்டுமானால் வாதிட முடியுமே தவிர வேறு என்ன செய்யமுடியும்? நீதி எப்படி அங்கே கிடைக்கும்? திரு. அப்துல் வகாப் அவர்கள் பேசும்போது சொன்னார்கள், திருநெல்வேலி நகரசபையில் மற்றொரு தலைவரின் படம் திறந்துவைக்கப் பட்டதன் காரணமாக எத்தனை அபிப்ராயம் பரிமாறப்பட்டது. அந்த நகராட்சி மக்கள் கண்காட்சி நடத்துவதற்கு எவ்வளவு குறுக்கீடுகள் இருந்தன? எவ்வளவு இடையூறுகள் செய்தார்கள் ஆளும் கட்சியினர்? படம் திறந்ததற்கு நகராட்சிப் பணம் செல

வழிக்கப்பட்டிருந்தால் அதை ஈடுகட்டுங்கள் என்று கேட்கலாம். படத்தின் விலை ஐம்பது ரூபாய் என்றால் தனிப்பட்டவர்கள் அந்த விலையைக் கட்டவேண்டுமென்றும் நகரசபையின் பணத்தை அதற்குப் பயன்படுத்தக் கூடாது என்றும் சொல்லியிருக்கலாம். திருச்சி நகரசபையிலே காமராஜரை வரவேற்க 12,000 ரூபாய் செலவழித்து வளைவு கட்டும்போது எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது? அது நகரசபை செய்யத்தக்க காரியமா என்று ஆளும் கட்சித் தலைவர்கள் இதுவரை கேட்டார்களா? நடவடிக்கை எடுத்தார்களா? அதைப் போலத்தான் இதில் கட்சி மனப்பான்மை இருக்கிறது என்று எண்ணுவதற்கு இடமிருக்கிறது. லோகல் பண்டு ஆடிட் முறை இருக்கிறது. அது நடப்பதற்கு மூன்றாண்டுகள் ஆகிறது. ஒரு வருஷத்திற்கொரு முறையோ ஆறு மாதத்திற்கொருமுறையோ, அதை நடத்தச் செய்யலாம். எப்போதும் நகரசபை தவறு செய்யுமானால் அதைக் கண்டிக்க எத்தனையோ வழிகள் இருக்கின்றன. அந்தக் குறைகளைச் சொல்ல மேடை இருக்கிறது. கருத்துக்களை வெளியிட பத்திரிகைகள் இருக்கின்றன. அப்படியெல்லாம் பார்த்துவிட்டு கடைசியிலே தேர்தல் இருக்கிறது, அதிலும் பார்க்கலாம். அதிலே திராவிட முன்னேற்றக் கழகம் குற்றம் செய்திருந்தால் அவற்றைச் சொல்லி அந்தத் தேர்தலிலே தோற்கடிக்கலாம். அப்படியெல்லாம் நடவடிக்கை எடுக்க வேண்டுமே தவிர இந்தச் சட்டத்தைக்கொண்டு வருவது உண்மையில் சென்னையில் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சியில் இருப்பதைக் கலைப்பதற்காகத்தான் என்று தெளிவாகத் தெரிந்தாலும், அதைக் கலைப்பதற்காக வருத்தப்படவில்லை. ஒரு ஸ்தாபனத்திற்கு மேல் இருக்கிற அதிகாரம் பெற்றவர்கள் தங்கள் கீழுள்ள அதை அகற்றிவிட முடியும். டில்லியிலே உள்ளவர்களின் ஆட்சி காங்கிரஸ் கட்சியினுடையதாக இல்லாமல் மற்றவர்களிடம் இருந்தால், லோகியாவின் ஆட்சியாக இருந்தால் மற்றவர்களைப் பார்த்து 'நீங்கள் மந்திரியாக இருப்பது கண்ணுக்குப் பார்வையாக இல்லை, அதனால் கலைக்கிறேன்' என்றுகூட சொல்லிக் கலைக்க முடியும். அதிகாரம் உள்ளவர்கள், இல்லாதவர்களை மிரட்டவும், அகற்றவும் செய்வது இயற்கைதான். தவறுக்கு பரிகாரம் தேடவேண்டும். ஜனநாயகத்தில் பொதுமக்கள் யாருக்கு வேண்டுமானாலும் வாக்களிக்கலாம். சட்ட மன்றத்தில் எப்படி மக்களின் வாக்குரிமை பெற்று வந்தார்களோ அதேமுறைதான் மாநகராட்சிக்கு வந்து ஆளுகிறவர்களும் தேர்தல் முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். குறை இருந்தால் நடவடிக்கை எடுக்க சட்டத்தைத் திருத்துங்கள். அதைக் கலைப்போம் என்றால் அதிகார மனப்பான்மையைத்தான் அது காட்டும். நகரசபை கலைக்கப்பட்டவுடன் இரண்டு மூன்று ஆண்டு காலத்திற்கு அரசாங்கத்தின் மேற் பார்வையில் அதிகாரிகளை வைத்து நிர்வாகம் நடத்துவோம் என்று சொல்கிறார்கள். அதிகாரிகளை வைத்து நடத்துவோம் என்ற முறையில் அதில் மட்டும் குறையிருக்காதா? அதைப்பற்றி சட்டசபையில் பேசவில்லையா? அதற்கெல்லாம் தக்க விசாரணை நடத்தி குற்றம் புரிந்தவர்கள் விலக்கப்பட்டிருக்கிறார்களா? பஞ்சாயத்துக்கள் நடைபெறுகின்றன. அதைப்பற்றிக் கூறும்

9th August 1965] *[திரு. க. அன்பழகன்]*

போது அமைச்சர் அவர்கள் வருத்தப்படக்கூடாது. எத்தனை பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் காமராஜர் பெயரால் விழா நடத்துவதற்கென்று நிதி சேர்ப்பதற்காக அவர்களிடத்தில் ஆசிரியர் வேலைக்கு ஆட்கள் வரும்போது அவர்களிடம், இது ஒரு பொதுக் காரியம், இதற்கு நிதி தாருங்கள், வேலைக்கு வைக்கிறோம் என்று நூறு இருநூறு என்று கேட்டிருக்கிறார்கள்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** பொதுவாகச் சொல்வதில் பயன் இல்லை. குறிப்பாக விவரங்கள் சொன்னால் விசாரித்து நடவடிக்கை எடுக்கலாம்.

**திரு. க. அன்பழகன் :** தென்னார்காடு மாவட்டத்தில் என்ற அளவில் கூறமுடியும். அப்படி அவர் கேட்டிருப்பது . . .

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** மன்றத்தில் பேசுகிறவர்கள் பொறுப்போடு பேசுகிறார்கள். குற்றம் சாட்டுவது என்றால், யார், எந்த ஊர், எப்படி வாங்கினார்கள் என்று கூறவேண்டும். அப்போது தான் அதை விசாரிக்கலாம். தவறு இருந்தால் ஒப்புக் கொள்ளலாம். வேறு பொறுப்பில்லாத வகையில் மெம்பர்கள் பேசாமல் குறிப்பாக எடுத்துச் சொல்லவேண்டும்.

**திரு. க. அன்பழகன் :** இந்த மசோதாவை சட்டசபை பொறுக்குக் குழுவிற்கு விட வேண்டுமென்பது தான் பிரச்னை. அமைச்சர் அவர்கள் யார் என்று சொல்ல வேண்டுமென்று கேட்டார்கள். ஆளும் கட்சியினுடைய செல்வாக்கைப் பயன்படுத்துவதற்கான ஒரு எடுத்துக்காட்டாக அது சொல்லப்பட்டதே தவிர அது குற்றச்சாட்டு ஆகாது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** வேலைக்குச் சேர்க்கப்படுகிற ஆசிரியர்களிடம் நிதி கேட்பது தவறு இல்லை என்றால், அது அங்கத்தினர்களுடைய கொள்கை. நாங்கள் அதை ஏற்றுக் கொள்ள மாட்டோம்.

**திரு. க. அன்பழகன் :** லஞ்சம் என்று அதைக் குறித்துச் சொல்லவில்லை. நிதி என்ற முறையில் கேட்கப்பட்டது. நிதி கேட்டார்கள் என்று சொல்லும்போது . . .

**திரு. கே. ராமதாஸ் :** Point of order, Sir. தலைவர் அவர்களே, நண்பர் அன்பழகன் அவர்கள் பேசும்போது ஆசிரியர் வேலை தேடி வருகிறவர்களிடத்தில் நிதி என்ற முறையில் நூறு இருநூறு கொடுக்கவேண்டுமென்று கேட்டதாகச் சொன்னார்கள். எந்த எந்த ஆசிரியர்களிடத்தில் கேட்கப்பட்டது என்று அது நிரூபிக்கப் படவேண்டும். இல்லாவிட்டால் அவர் சொல்லியதை வாபஸ் பெற வேண்டும்.

**MR. CHAIRMAN :** That is what the Chief Minister said.

திரு. க. அன்பழகன் : இதே மன்றத்தில் ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள், மாநகராட்சியில் உள்ளவர்கள், ஆறு கோடியை பங்கு போட்டுக்கொள்கிறார்கள் என்று சொன்னார். அப்படிப் பங்கு போட்டுக்கொள்பவர்கள் யார் என்றோ, எங்கே எப்படி என்றோ முதலமைச்சர் அவர்கள் கேட்கவில்லை.

கனம் திரு. எம். பக்தவத்சலம் : பங்கு போட்டுக்கொள்கிறார் கள் என்றால் ஒரே அர்த்தம்தான் அங்கத்தினருக்குப் புரிகிறது. நான் அப்படி எடுத்துக்கொள்ளவில்லை. செலவினங்களை பகிர்ந்து கொள்கிறார்கள் என்றுதான் எடுத்துக்கொண்டேன். அங்கத் தினர் குத்தலாகச் சொன்னார் என்றால் அதை அப்போதே எதிர் கட்சி அங்கத்தினர் கேட்டிருக்கவேண்டும். இப்போது சொல் வதில் அர்த்தமில்லை.

திரு. க. அன்பழகன் : அதைப்போன்ற நல்ல எண்ணம் என்னு டைய வார்த்தையிலேயும் எடுத்துக் கொள்ள இடமில்லையா? அதே முறையில்தான் . . .

திரு. கே. ராமதாஸ் : ஒரு Point of order Sir. குறிப்பாக குற்றம் சாட்டியதை நாங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. அதற்கு விளக்கமாக சொல்லவேண்டும் அல்லது அதை வாபஸ் பெறவேண்டும். ஆசிரியர்களிடம் வாங்கினார்கள் என்றால் அதை நிரூபிக்கவேண்டும்.

SRI S. K. SAMBANDAN : On a point of order, Mr. Chairman, the practice generally observed in this House is that no names outside the Members of the Government or outside the Members of the House should be mentioned on any account. I do not know why the members on the other side, should ask to specify the names.

கனம் திரு. எம். பக்தவத்சலம் : குற்றம் சாட்டுவது என்றால் தவறுகளை சொல்லவேண்டுமென்று சொன்னோம். முடியாது என்றால் விட்டுவிடுங்கள். அது Points of order ஆகாது.

திரு. க. அன்பழகன் : தலைவர் அவர்களே, நான் ஆளும் கட்சி யினுடைய செல்வாக்கு எந்த எந்த வகையில் பயன்படுத்தப் படுகிறது என்று வற்புறுத்துவதற்குத்தான் சொன்னேன். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் தங்களுக்கு செல்வாக்கு இருக்கிற காரணத்தால் சட்டமன்றத்தில் தங்கள் கொள்கையை நிறை வேற்றுவதற்கும், நினைத்தவுடனே கலைத்துவிடுவோம் என்று சொல் வதற்கும் மட்டுமே அது பயன்படும். எதிர்க் கட்சியைச் சேர்ந்த வர்களைப் பார்த்து, 'என் கட்சியில் சேருங்கள், இல்லாவிட்டால் கலைத்துவிடுவோம்' என்று சொல்வதற்கு இது பயன்படும். 'சேருங்கள், இல்லாவிட்டால் பதவி போய்விடும்' ஆகையால் காங்கிரஸ் பக்கம் திரும்புங்கள்' என்று மிரட்டவும் இது பயன் படாதா? ஆகையால் நிச்சயமாக இந்தச் சட்டத்தில் அது நடக்குமோ என்று ஐயுறுகிறேன். இது ஒரு பொறுக்கு

9th August 1965] [திரு. க. அன்பழகன்]

குழுவிற்கு அனுப்பப்படுமானால் அங்கே ஆராய வாய்ப்பு உண்டு. மேலும் சிந்திப்பதற்கான வாய்ப்பு உண்டு. கையில் துப்பாக்கியை கொடுத்துவிட்டு நினைத்தால் சுடலாம் என்றும் சொல்லிய பிறகு ஆனால் அவர் சுடமாட்டார், மிக நல்லவர் என்று சொல்வதைவிட இதை இன்றைய தினம் சட்டத்தில் ஏற்றிவிட்டால் அது பிறகு அந்த இடத்தை விட்டு நீங்காது. 1967-க்குப் பிறகும் 1972-க்கும் பிறகும் அது இருக்கும். அதை மாற்றுவது இனி கஷ்டம். இது ஜனநாயகத்துக்கு கேடு பயப்பதாகும். இன்று ஜனநாயக முறைப்படி பெரும்பான்மை வாக்கு காரணமாக சட்டமியற்ற எல்லா உரிமைகளும் எல்லா வாய்ப்பும், சந்தர்ப்பமும் ஆளும் கட்சிக்கு இருக்கிறது. நாங்கள் எதிர்ப்பக்கத்தில் உள்ளவர்கள் தடுத்து நிறுத்த முடியாது என்று தெரியும். ஆனால் ஆளும் கட்சிக்கு ஜனநாயகத்தை நடைமுறையில் கொண்டுவரும் நல்ல எண்ணம் இருக்குமானால் எதிர்க் கட்சியை அந்த இடத்தைவிட்டு அகற்றுவதுதான் உள் நோக்கம் என்ற எண்ணம் ஏற்படாமல் மக்கள் உரிமை என்று எப்படி பஞ்சாயத்துக்களை பற்றி அமைச்சர் அவர்கள் சொல்கிறார்களோ அதைப்போல இதைத் திருத்தினால் இந்தச் சட்டத்திற்கு தேவையில்லை. அதிகாரம் காரணமாக இந்த சட்டத்தை நிறைவேற்றுவது கேடு பயக்கும் என்று உணர்வார்கள். நானே எதிர்க்கட்சி நண்பர்களோ சொல்கிற காரணத்தால் முதலமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள இணங்க முடியாத நிலை இருந்தாலும் பொறுக்குக் குழுவுக்கு இதை விடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* **கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதாவைப்பற்றி எதிர்க்கட்சியிலே எதிர்பக்கத்தில் வீற்றிருக்கின்ற கனம் தி. மு. க. அங்கத்தினர்கள் ஆத்திரப்படுவார்கள் என்பதை நான் எதிர்பாராமல் இல்லை. கனம் தி. மு. க. அங்கத்தினர்கள் மட்டுமல்ல, மற்ற எதிர்ப்பு கட்சியாரும் இந்த மசோதாவை பலமாக எதிர்ப்பார்கள் என்பதையும் நான் எதிர்பாராமல் இல்லை. அதற்காக நான் வருந்தவும் இல்லை. ஆனால் எனக்கு வருத்தம் ஒன்று உண்டு. வருத்தம் என்றால், எதிர்க்கட்சியாருக்கு இவ்வளவு தூரம் சங்கடம் ஏற்படுகின்றதே, கவலை ஏற்படுகின்றதே, என்னாலே இத்தகைய ஒரு கவலை ஏற்பட்டதே, என்பதிலே வருத்தம். அதைவிட முக்கியமான வருத்தம் இன்று இப்பேர்ப்பட்ட மசோதாவை நான் கொண்டு வந்திருக்கிறேனே என்று. இப்படி மசோதாவை கொண்டுவர இருக்கின்றதே என்றால், 'யாரோ வற்புறுத்தினார்கள், யாரோ தொல்லை கொடுத்தார்கள், ஆகவே தவிர்க்க முடியாத வகையிலே இதைக் கொண்டுவந்து விட்டேன்' என்று யாரும் எடுத்துக்கொள்ளக்கூடாது. மனம் இல்லாமல் இதைக் கொண்டுவந்திருக்கிறேன் என்றும், யாரும் எடுத்துக்கொள்ளக்கூடாது. பொறுப்புணர்ச்சியோடு இந்த மசோதாவை இங்கே சமர்ப்பித்திருக்கிறேன். 6-00 p.m.

கனம் உறுப்பினர் திரு. ஹண்டே அவர்கள் சொன்னார்கள், 'இப்பொழுதா இதைக் கொண்டுவருவது, in opportune' என்று சொன்னார்கள். 'opportune, in opportune' என்பது அவசியத்தைப்

பொருத்ததாக இருக்கிறது. உண்மைதான். ஒரு சங்கடமான நிலைமைதான். நான் அதை மறுக்கவில்லை. ஆளுகின்ற கட்சிக்கு எதிர்க்கட்சியாக இருக்கின்ற தி. மு. க. வினர் நகர மன்றத்திலே பெரும்பாலான கட்சியாக இருந்து நகர மன்ற நிர்வாகத்தின் பொறுப்பை ஏற்று நடத்திக் கொண்டு வருகின்றார்கள். அதுதான எதிர்க்கட்சி உறுப்பினர்கள், திருப்பித் திருப்பி, ஏதோ வேண்டுமென்றே ஒரு க்ஷாத்திரத்தோடு, அந்த நிர்வாகத்தை அகற்றவேண்டுமென்று, அந்த அதிகாரம் எடுத்துக் கொள்ளும் வகையிலே, இந்த மசோதாவை கொண்டுவந்ததாக குறிப்பிட்டார்கள். ஆனால் நிலை அது அல்ல. இன்றைக்கு இருக்கிற ஒரு நிலையிலே நகரமன்ற நிர்வாகத்தை சீர்படுத்த வேண்டும், அது மக்களுக்கு முற்றிலும் பயன் படவேண்டும் என்ற எண்ணம் அரசாங்கத்திலே இருக்கிறது என்றால் அந்தப் பொறுப் புணர்ச்சியோடுதான், எதிர்க் கட்சியினருக்கு எவ்வளவு ஆத்திரம் வந்தாலும் சரி, எவ்வளவு தவறுதலாக அவர்கள் அதை எடுத்து திரித்துக் கூறினாலும் சரி, எங்கள் மீது க்ஷாத்திரத்தோடு கொண்டு வந்தார்கள் என்று கூறக்கூடிய நிலைமை ஏற்பட்டாலும் சரி, அரசாங்கம் இந்த மசோதாவை இங்கே சமர்ப்பித்து இருக்கிறது. மேல் நாடுகளிலே போய் பார்த்துவிட்டு வந்திருக்கிறார்கள். கனம் அங்கத்தினர் திரு. சம்பந்தன் அவர்கள் மேல் நாடுகளிலே இருக்கிற முனிசிபாலிடிகளையெல்லாம் சொன்னார்கள். அது விஷயம் வேறு. இது விஷயம் வேறு. மேல்நாடுகளிலே இருக்கிற முனிசிபாலிடிகள் அரசாங்கத்திடமிருந்து உதவி கேட்பதில்லை. அரசாங்கத்திடம் பணம் வாங்குவதில்லை. கடனோ மானியமோ வாங்குவதில்லை. அவர்கள் முழு பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறார்கள். ஏற்றுக்கொண்டு போலீஸ் முதற்கொண்டு வைத்து நடத்துகின்றார்கள். அதோடு ஒப்பிட்டுப் பயனில்லை. ஆனால் நம்முடைய நாட்டில் ஸ்தல ஸ்தாபனங்களின் உரிமையை உணர்ந்திருக்கிறோம். லோகல் 'இனிஷியேடிவ்' வேண்டும். உள்ளூர் காரியங்களை நடத்துவதற்கு மக்களுடைய பிரதிநிதிகளே பொறுப்பு எடுத்துக்கொண்டு நடத்த 'இனிஷியேடிவ்' வேண்டும். எல்லாவற்றுக்கும் உத்தரவு போட்டு நடத்துவது இல்லை. அது தான் அரசாங்கத்தின் கொள்கை. ஸ்தல ஸ்தாபன ஆட்சியைப் பொருத்தமட்டில் அதிலே சிறிதுகூட மாறுதல் இல்லை. முன்பு ஸ்தல ஸ்தாபனங்களைப் பற்றி பல சட்டங்கள் இருந்தன. சுதந்தரம் அடைந்ததற்கு முன்பும், சுதந்தரம் அடைந்த பிறகும், சட்டங்களை ஏற்படுத்தி இருக்கிறோம். அதன் அடிப்படை என்ன? பஞ்சாயத்தாக இருந்தாலும், பஞ்சாயத்து யூனியனாக இருந்தாலும், முன்பிருந்த ஜில்லா போர்டாக இருந்தாலும், நகர மன்றமாக இருந்தாலும், நகர மாமன்றமாக சென்னைக் கார்ப்பரேஷனைப் போன்றதாக இருந்தாலும், சட்டத்தின் அடிப்படை என்ன? மக்களுக்கு வேண்டிய சேவை புரியவேண்டும். தவறுதல் கூடாது. தவறுதல் இல்லாமல் பாதுகாத்துக்கொள்வதற்கு அரசாங்கத்தின் தலையீடு இருக்கிறது. ஸ்தல ஸ்தாபன ஆட்சிதான். இருந்தாலும் அரசாங்கம் தாங்கள் இயற்றிய சட்டத்தில் சிற்சில அதிகாரங்களை

9th August 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த அதிகாரங்களைப் பிரயோகித்து அவசியமானால் தலையிடவேண்டிய நிமித்தம் இருக்கிறது. ஆனால், 'தலையிடுகின்றார்கள், இது ஜனநாயகமா, என்ன ஜனநாயகம்' என்று பேசுவது யார் வேண்டுமானாலும் பேசலாம். சுதந்திரா கட்சி அங்கத்தினர்கள் சுதந்திரம் என்று பேசுவது மாதிரி, ஜனநாயகம் என்று பேசுவது மாதிரி, பெயரே சுதந்திரா கட்சி என்று வைத்துவிட்டார்கள். எல்லோருக்கும் சுதந்திரம், தனிப்பட்டவர்கள் எது வேண்டுமானாலும் செய்யலாம், தடி எடுத்தவன் தண்டல்காரனாக இருக்கலாம், பிறரை சுரண்டலாம், அதுதான் சுதந்திரா கட்சியின் கொள்கை.

DR. H. V. HANDE: On a point of order, Mr. Chairman, I request the Chief Minister not to cast appersions on the name of the Swatantra Party.

திரு. எம். சுப்பையா செட்டியார்: ஒரு பாயிண்ட் ஆப் ஆர்டர், சார். முதன் மந்திரி அவர்கள், 'சுதந்திரா கட்சிக்காரர்கள் கொள்கைகளால் நாட்டில் அராஜகம்தான் ஏற்படும் என்ற முறையில், சுதந்திரா கட்சியை நடத்திக்கொண்டிருக்கிறார்கள்' என்று ஆத்திரத்தில் சொன்னார்கள். ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அரசாங்கத்தின் கடமை என்ன என்பதை முதன் மந்திரி அவர்கள் மறந்துவிட்டு பேசுகிறார்களோ என்று சந்தேகம் ஏற்படுகிறது. அரசாங்கத்தின் வேலை என்ன? எந்தக் கட்சி அரசாங்கமாக இருந்தாலும், அமைதியையும், நியாயத்தையும் காப்பாற்றவேண்டியதுதான். சுதந்திரா கட்சியின் கொள்கை மனிதனுடைய சுதந்திரத்தைப் பறிக்காமல், அப்படிப் பறிப்பதை எதிர்ப்பதுதான் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கனம் திரு. எம். பக்தவத்சலம்: அதுதான் பாடுபட்டு பெற்ற நாட்டின் சுதந்திரத்துக்கு பங்கம் விளைவிக்கும் வகையிலே மனிதனின் சுதந்திரம்தான் பெரிது என்பது சுதந்திரா கட்சியின் கொள்கை. அதை நாங்கள் ஒருபோதும் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

DR. H. V. HANDE: On a point of order, Sir. The Chief Minister wants to convert the entire country into a jail.

MR CHAIRMAN: This is not a point of order.

கனம் திரு. எம். பக்தவத்சலம்: அவருக்கு உரிமை இருக்கிறது. சுதந்திரா கட்சியிலே நெருங்கி இருக்கிறார். அதனாலே அவருக்கு உரிமை இருக்கிறது. அதனால் சொல்லலாமே, தவிர அது ஒரு 'பாயிண்ட் ஆப் ஆர்டர்' ஆகாது.

இப்பொழுது நகர மன்றம் மக்களுக்கு சேவை புரிவதற்காக, மக்களுடைய நலன் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் ஸ்தல ஸ்தாபனத்துக்கு உரிமை அளிக்கப்பட்டு ஸ்தல சுயாட்சி உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. நம்முடைய சட்டங்களிலே எல்லாம் அதிகாரம் எடுத்துக்கொண்டிருக்கிறோம். அதுதான் இந்த சட்டத்தின் அடிப்படை. அந்த அதிகாரத்தை ஏன் செலுத்த

[திரு. எம். பக்தவத்சலம்] [9th August 1965

வேண்டி இருக்கிறது? அதிகார பித்தினுலே அல்ல. இந்த நகர மன்ற நிர்வாகம் ஒழுங்காக நடைபெற வேண்டும், மக்களுக்கு அது பயன்பட வேண்டும், சீராகப் பயன்பட வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் அதிகாரங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. அதை உபயோகிப்பது பற்றி ஆராய்கின்ருேம். ஆராய்ந்து அவசியமானல் ஒவ்வொரு சட்டத்துக்கும் திருத்தங்கள் கொண்டு வருகின்ருேம். இந்த மன்றத்திலே நிறைவேறின சட்டங்களுக்கு அப்போதைக்கு அப்போது திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டுத்தான் வருகின்றன. எந்தப் பார்லிமெண்டிலும் திருத்தங்கள் வாராமல் இருப்பதில்லை. அனுபவத்தை ஒட்டி திருத்தங்கள் வந்து கொண்டிருக்கும். இப்பொழுது தி.மு.க. வினர் நகர மன்ற ஆட்சியை ஏற்று நடத்துகின்ருர்கள். அந்த க்ஷாத்திரத்தை வைத்துக் கொண்டுதான் இதைக் கொண்டுவந்திருக்கிருேம் என்ருல், இன்றைக்குத்தானு ஏற்று நடத்துகின்ருர்கள்? எத்தனையோ ஆண்டுகளாக ஏற்று நடத்துகின்ருர்கள். இதற்கு முன்பே ஏன் இந்த அரசாங்கம் இத்தகைய மசோதாவைக் கொண்டு வரவில்லை. சமீபத்தில் தேர்தல் நடந்தது. அந்தத் தேர்தலிலே தி.மு.க.-வினர் வெற்றி பெற்ருர்கள். அவர்கள் வெற்றி பெற்று ஆட்சியை ஏற்றுக் கொண்டார்கள். அதிலே இருந்து இப்பொழுது 1½ வருஷம் ஆகின்றதே, 1½ வருஷத்துக்கு முன்பே வேண்டுமென்ருல், இந்த தி.மு.க. வினர் அங்கே இருக்கக்கூடாது என்ற குறுகிய நோக்கம், கெட்ட எண்ணம் இருந்திருந்தால், அப்பொழுதே இந்த அரசாங்கம் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்காதா, என்று கனம் அங்கத்தினர்கள் சிந்திக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைக்கு ஒரு சில அதிகாரங்கள் இருக்கின்றன என்பதை ஒத்துக் கொண்டிருக்கிருர்கள். அந்த அதிகாரங்கள் இன்னும் அதிகப்படுத்தப்பட்டால் அதை நாம் தவறுதலாகப் பயன்படுத்திக் கொள்வோம் என்பதாக சில எடுத்துக்காட்டுகள் உறுப்பினர்கள் குறிப்பிட்டார்கள். இந்தி எதிர்ப்பு தீர்மானத்தைப்பற்றி குறிப்பிட்டார்கள். சென்னை நகர மன்றம் நிறைவேற்றிய இந்தி எதிர்ப்பு தீர்மானம் அரசியல் அமைப்பு சட்டத்தைக்கூட மாற்றி அமைக்க வேண்டும் என்ற வகையிலே இருந்தது. அந்த தீர்மானம் 'நீங்கள் நிறைவேற்றுவதற்கு உரியது அல்ல; அந்த தீர்மானத்தை நீங்கள் ஏன் ரத்து செய்யக்கூடாது' என்று அரசாங்கம் கேட்டது. அவர்கள் அதற்கு இணங்கவில்லை. அதற்குமேலே இந்த தீர்மானம் ரத்து செய்யப்பட்டது. அவ்வளவுதான். அதோடு தீர்ந்து விட்டது. கோவையில் காங்கிரசார் நகராட்சி மன்றத்தை நடத்துகிருர்கள். கோவை நகராட்சி மன்றத்திற்கும் இதே மாதிரி நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. காங்கிரசார் நடத்தும் வேறு சில ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த நகராட்சி மன்றங்கள் தங்கள் தீர்மானங்களை வாபஸ் வாங்கிக்கொண்டிருக்கின்றன. எனவே இந்த விஷயத்தில் சர்க்கார் பாரபட்சம் காட்டவில்லை.

9th August 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

திருநெல்வேலி நகராட்சி மன்றத்தை எடுத்துக்கொண்டால், அங்கே வேறு கட்சித் தலைவர்களின் உருவப்படங்களை அந்த நகராட்சி மன்றத்தினர் வைத்தார்கள், என்பதற்காக நடவடிக்கை எடுக்கப்பட்டிருப்பதாகச் சொல்வதற்கில்லை. அரசாங்கத்தின் அனுமதியைப் பெற்றுத்தான் உருவப்படங்களை நகராட்சி மன்றுங்கள் வைக்கவேண்டும். அது தான் நடைமுறை; விதி அப்படித்தான் இருக்கிறது. அந்த நகராட்சி மன்றத்தினர் அங்கே உருவப்படங்களை அரசாங்கத்தைக் கேட்காமல் வைத்தார்கள். அதற்கு அரசாங்கத்தின் அனுமதியை அவர்கள் ஏன் கோரவில்லை என்பதுபற்றித்தான் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது; அந்த நகராட்சி மன்றத்தைக் கலைக்க வேண்டுமென்று அவர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கப்படவில்லை. அரசாங்கத்தின் அனுமதியைக் கோராமல் அங்கே ஏன் உருவப்படங்களை அவர்கள் வைத்தார்கள் என்பதற்கு அவர்களிடம் விளக்கம் கேட்கப்பட்டிருக்கிறது. 6-10 p.m.

இப்போதுள்ள சட்டத்தின் சில பிரிவுகளில் நகர சபைகள் விஷயத்தில் அரசாங்கத்திற்கு அதிகாரங்கள் இருக்கின்றன. அந்த அதிகாரங்கள் போதுமே, இன்னும் அதிகாரங்கள் வேண்டுமானால் அதற்கான முறையில் சட்டத்தைத் திருத்திக்கொள்ளலாம் என்று கனம் அங்கத்தினர்கள் கூறினார்கள். சட்டத்தின் பிரிவுகளை நன்றாக ஆராய்ந்ததில், தேர்ந்தெடுக்கப்பட்ட கவுன்சிலர்கள் தொடர்ந்து தவறாகவே நடந்துகொண்டால் அதைத் தவிர்க்க முடியாது என்று தெரிந்ததால்தான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமாக ஒரு உதாரணம் சொல்ல விரும்புகிறேன். வேறொரு மன்றத்தைச் சேர்ந்த ஒரு உறுப்பினர், அந்த மன்றத்தில் இரண்டு நாட்களுக்குமுன் நான் குறிப்பிட்டதை 'நான் பாட்டி கதை' சொன்னதாக பொதுக்கூட்டத்தில் சர்வ சாதாரணமாகக் குறிப்பிட்டாராம். அவருக்கு அது பாட்டி கதையாகத்தான் இருக்கிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு சென்னை நகரசபையால் அரசாங்கத்தின் உதவியுடன் 50 வீடுகள் சென்னையில் கட்டப்பட்டன. வீடில்லாமல் கஷ்டப்படும் ஏழை மக்களுக்கு hire purchase முறையில் இவற்றை ஏதாவதொரு விலைக்குக் கொடுக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் இவை கட்டப்பட்டன "வீடில்லாதவர்களை 'லிஸ்ட்' எடுத்து, அவர்களுள் எத்தனை பேருக்குக் கொடுக்க முடியுமோ அத்தனை பேருக்குக் கொடுங்கள்" என்று நகராட்சி மன்றத்திடம் அரசாங்கம் சொன்னது. அதற்கு நகராட்சி மன்றம் ஒத்துக் கொள்ளவில்லை. "நாங்கள் கவுன்சிலர்கள் 100 பேர் இருக்கிறோம். இரண்டு கவுன்சிலர்களுக்கு ஒரு வீடு வீதம் இந்த 50 வீடுகள் கொடுக்கப்பட வேண்டும்" என்று அவர்கள் வற்புறுத்தினார்கள். இந்த விஷயம் எனக்கு ரொம்ப நாட்களாகத் தெரியாமல் இருந்தது. சில நாட்களுக்கு முன்பு நகராட்சி மன்ற அங்கத்தினர்களுடன் மேயர் என்னிடம் வந்தார். அப்போதுதான் எனக்கு இந்த விஷயம் தெரிந்தது. இந்தத் தகராறு காரணமாக இந்த வீடுகள் இதுவரை யாருக்கும் கொடுக்கப்படவில்லை. இரண்டு

வருஷமாக இவற்றிற்கு மேற்பார்வையும் இல்லை; இதன் காரணமாக இவைகளை ரிப்பேர் செய்யவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. என்னிடம் வந்த மேயரும், கவுன்சிலர்களும், கவுன்சில் சொல்கிறபடி தங்களுக்கு அவைகள் கொடுக்கப்பட வேண்டும் என்றார்கள். இதற்குக்கூட தங்களுக்கு உரிமை இல்லையா என்று அவர்கள் கேட்டார்கள். அதற்கு, அரசாங்கம் பரிசீலனை செய்யும் என்று நான் பதில் சொன்னேன். சீட்டுப் போட்டுத்தான் கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் தெரிவித்தது. அதை நகராட்சி மன்றம் ஏற்றுக்கொள்ளவில்லை. இந்த வீடுகளை சீட்டுப் போட்டுத் தான் கொடுக்கவேண்டும் என்று இரண்டு நாட்களுக்குமுன் கமிஷனருக்கு அரசாங்கத்திடமிருந்து உத்தரவு அனுப்பப்பட்டது. இந்த உத்தரவை கமிஷனர் நிறைவேற்ற முடிகிறதா? இது மேயர் மூலமாக கமிஷனருக்குப் போனது. இந்த விஷயத்தை கவுன்சிலுக்குக் கொண்டு போகவேண்டும் என்று அங்கே சொல்லப் பட்டது. கார்ப்பொரேஷன் கவுன்சில், தான் முன்பு நிறைவேற்றிய தீர்மானத்தின்படியே இந்த வீடுகள் கொடுக்கப்படவேண்டும், அந்த முடிவை தான் மாற்றிக்கொள்வதாக இல்லை என்று சொன்னது. அந்தக் கவுன்சில், கமிஷனரிடம் "இந்தக் கவுன்சிலின் உத்தரவை நிறைவேற்ற வேண்டிய கடமையும் உனக்கு இருக்கிறது. நகராட்சி மன்றச் சட்டத்தில் ஒரு செக்ஷன் அதற்கான முறையில் அமைந்திருக்கிறது. எனவே நீ எப்படி இந்தக் கவுன்சிலின் தீர்மானத்திற்கு விரோதமாகச் செயலாற்றலாம்" என்றது. எனவே இந்த வீட்டுப் பிரச்னை பற்றி இன்னும் முடிவாகவில்லை. இதை ஒரு திருஷ்டாந்தமாக நான் சொன்னேன். இம்மாதிரி பல உதாரணங்கள் இருக்கின்றன. இம்மாதிரி பல பிரச்னைகள் இருக்கின்றன.

கல்கத்தா கார்ப்பொரேஷன் 1948-ம் ஆண்டிலிருந்து 1952-ம் ஆண்டுவரை கலைக்கப்பட்டதாக இருந்தது. எனவே ஒரு நகர சபை கலைக்கப்படுவது என்பது இப்போதைய புதிய நிகழ்ச்சி அல்ல. இந்த மசோதா ஸ்தல சுயாட்சிக்கு பங்கம் விளைவிக்கவில்லை. நாகபுரி கார்ப்பொரேஷனை ஏன் கலைக்கக்கூடாது என்று அந்த நகராட்சி மன்றத்திற்கு நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய அதிகாரம் அரசாங்கத்திற்கு இருக்கவேண்டும். இத்தகைய அதிகாரம் அரசாங்கத்திற்கு இருக்க சட்டத்தில் வகை செய்யாதது, சட்டத்தில் ஒரு குறைவு என்று இப்போது புலப் படுகிறது. இந்தக் குறைவை நீக்குவதற்காகத்தான் இந்த மசோதாவை அரசாங்கம் கொண்டு வந்திருக்கிறது. சென்னை நகராட்சியில் இப்போது எதிர்க்கட்சியினர் அதிகாரத்தில் இருப்பதால் இந்த மசோதா கொண்டுவரப்படுவதாக எதிர்க் கட்சியினர் சொல்லக்கூடும் என்று அரசாங்கம் எதிர்பார்க்காமல் இல்லை. அரசாங்கம் நகர மக்கள்பால் தன் கடமையைச் செய்யவேண்டும். தான் சில கடமைகளைச் செய்யும்போது எதிர்க் கட்சியினர் தன்னைக் குறைகூறுவார்களே, தன் மீது பழி கூறுவார்களே என்று அரசாங்கம் அஞ்சினால், அது தன் கடமைகளைச் செய்ய முடியாது. அந்தப் பொறுப்புணர்ச்சியுடன் இந்த மசோதாவை நாங்கள்

9th August 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

கொண்டுவந்திருக்கிறோம். நான் ஏற்கனவே குறிப்பிட்டது போன்ற சில தகராறுகள் வருவதால் இந்த மசோதாவைக் கொண்டு வர வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நான் ஏற்கனவே கூறிய காரணங்களால், இந்த மசோதாவிற்கு ஒரு பொறுக்குக் கமிட்டி அவசியமில்லை. எனவே இதைப் பொறுக்குக் கமிட்டிக்கு விட வேண்டுமென்று கோரும் பிரேரணையை எதிர்க்கிறேன். இந்த மசோதாவை மேலும் ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற பிரேரணையை ஆதரிக்க வேண்டும் என்று சபையினரைக் கேட்டுக்கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

MR. CHAIRMAN : The question is :

"That the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965 (L.A. Bill No. 16 of 1965) be referred to a Select Committee of the Legislative Council consisting of the following Members :—

1. The Hon. Sri S. M. A. Majid.
2. Sri K. Anbazhagan.
3. Sri M. Subbiah Chettiar.
4. Sri K. Rajaram.
5. Sri K. R. Ramasamy.
6. Dr. H. V. Hande and
7. The Hon. Sri M. Bhaktavatsalam (Mover of the Bill).

The amendment was put and declared lost.

Sri K. Anbazhagan demanded a poll and the House divided thus :— 6-20 p.m.

***Ayes.***

**Dr. H. V. Hande**
**Sri A. K. Thangavel Mudaliar**
**,, C. P. Chitrarasu**
**,, K. R. Ramasamy**
**,, K. S. Abdul Wahab**
**Sri S. K. Sambandam**
**,, G. Krishnamurthy**
**,, M. Subbiah Chettiar**
**,, N. V. Natarajan**
**,, K. Anbazhagan**

***Noes.***

**The Hon. Sri R. Venkataraman**
**Sri K. Rajaram**
**,, K. Ramadass**
**,, V. K. Palaniswamy Gounder**
**Srimathi Manjubashini**
**,, Saraswathi Pandurangam**
**,, T. L. Thirupurasundari**
**Dr. T. V. Sivanandam**
**Sri N. R. Thiagarajan**
**,, Mohanlal M. Mehta**
**Sri K. Ramakrishna Achari**
**,, S.P.K.A. Lakshmanan Chettiar**
**,, A. Sambasiva Reddiar**
**,, S. D. Sundaram**
**,, E. Janakiram Mudaliar**
**,, K. Kothandaraman**
**,, V. Rengasamy.**
**,, M. Ethirajulu**
**,, K. Kamalakkannan**
**,, A. Chidambara Mudaliar**

*Neutral.*—Nil.

Ayes 10, Noes 20, Neutral Nil.

The amendment was lost.

[9th August 1965

MR. CHAIRMAN : I now put the main motion to the vote of the House. The question is :

"That the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965 (L.A. Bill No. 16 of 1965), as passed by the Assembly, be taken into consideration".

The motion was put and carried.

6-22 p.m. MR. CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow.

The House then adjourned.

## VII—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A.—Statutory Rules and Orders.

* 185. *Notification issued with G.O. Ms. No. 2994, Industries, Labour and Co-operation, dated 11th June 1965 making amendments to the Madras Co-operative Societies Rules, 1963 [Laid on the Table of the House under section 119(4) of the Madras Co-operative Societies Act, 1961 (Madras Act 53 of 1961).]*

* 186. *Notification issued with G.O. Ms. No. 1015, Education, dated 14th June 1965 approving the list of all the parks and play-fields set out in the area within the jurisdiction of the Walajapet Municipal Council in North Arcot district. [Laid on the Table of the House under section 14 (3) of the Madras Parks, Play-fields and Open-spaces (Preservation and Regulation) Act, 1959 (Madras Act 26 of 1959)].*

* 187. *Notification issued with G.O. Ms. No. 919, Education, dated 1st June 1965 approving the list of all the parks, and play-fields set out in the area within the jurisdiction of the Kuzhithurai Municipal Council in Kanyakumari district. [Laid on the Table of the House under section 14 (3) of the Madras Parks, Play-fields and Open-spaces (Preservation and Regulation) Act, 1959 (Madras Act 26 of 1959)].*

†188. *Notification issued with G.O. Ms. No. 2707, Home, dated 25th August 1964 exempting from payment of tax leviable for the Russian Rotary Drill (D. D. 30R) with the Truck No. MAZ 200 belonging to Agriculture Department. [Laid on the Table of the House under Section 11(2) of the Madras Motor Vehicles Taxation Act, 1931 (Madras Act III of 1931)].*

‡ 189. *Notification issued with G.O. Ms. No. 977, Education, dated 9th June 1965 approving the list of all the parks and play-fields set out in the area within the jurisdiction of the Mannargudi Municipal Council in Thanjavur district. [Laid on the Table of the House under Section 14 (3) of the Madras Parks, Play-fields and Open-spaces (Preservation and Regulation) Act, 1959 (Madras Act 26 of 1959)].*